ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யர்கள் அருளிச்செய்த

# ஸ்ரீ சாரதாபுஜங்கப்ரயாதாஷ்டகம்

ஸ்ரீ ஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்திலுள்ள

# தசச்லோகீ



பப்ளிஷர்ஸ் :

கிரி பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி 13உ
ஆனந்த...

ஓம்

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யர்கள் அருளிச்செய்த

# ஸ்ரீ சாரதாபுஜங்கப்ரயாதாஷ்டகம்

(ஸ்ரீ ஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்திலுள்ள
தசச்லோகீயுடன்)

ஸ்ரீ வே. நாராயணன், M.A., M.L.
அவர்களால் எழுதப்பட்டது

*ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின் திவ்ய ஸ்ரீமுகத்துடனும்*

கிரி ப்ரஸ்

பப்ளிஷர்ஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5.

## பதிப்பாசிரியரின் முன்னுரை

1944-ம் வருஷத்திலே என்னால் "ஸரஸ்வதீ ஸ்தோத்ரம்" என்று மகுடமிட்டுப் பதிப்பிக்கப் பெற்ற ஸ்ரீ சாரதா புஜங்கப்ரயாதாஷ்டகம் தசச்லோகீ என்னும் நூல்களிரண்டும், இவற்றைப் பொறுக்கியெடுத்து தமிழ் அனுவாதமும் கருத்துரையும் எழுதிய ஸ்ரீ வே. நாராயணய்யர் மூலமாய் பரம கருணாமூர்த்திகளாய் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஜகத் குரு ஸ்ரீசந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகளைப் ப்ரார்த்தித்துப்பெற்ற திவ்ய ஸ்ரீமுகத்தோடு புதுப் பதிப்பாக வெளியிடப்பட்டிருக்கின்றது.

இத்தகைய நூல்களை வெளியிடுவதற்குப் போதிய பொதுஜன ஆதரவு வெண்டும் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. அவ்வித ஆதரவைப் பெற்று பக்த லோகத்திற்குரிய இந்தக் கைங்கர்யத்திலே மேன்மேலும் ஈடுபட்டு முன்னேறுமாறு என்னை ஆசீர்வதித்து ஸ்ரீமுகத்தை அருளிய ஸ்ரீமதாசார்யர்களின் திருவடித் தாமரைகளை எப்பொழுதும் போற்றுகின்றேன்.

திருவல்லிக்கேணி,
சென்னை.
11—5—48

K. கைலாஸம் அய்யர்
பதிப்பாளர்.

ஸ்ரீ:

# முத்ரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யவர்யர்களான ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்டித ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதீச்வர ஸ்ரீமச் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்படுகின்றது.

பரவித்யை அபரவித்யைகளை முடிவாகவுள்ள எல்லா வித்யைகளிலும் இன்புறுகின்ற பராசக்தியாகிய ஸ்ரீ சாரதாவை விதிப்படி ஆராதிக்கத் திறனற்ற பக்தர்களின்மீது கருணை கூர்ந்து ஸரளமும் மதுரமுமாயிருந்தாலும் கம்பீரமும் பொருந்தியதான *ஸ்ரீ சாரதா புஜங்கப்ரயாதாஷ்டகம்* என்னும் ஸ்தோத்ரத்தை அருளினார்கள். ஸ்ரீமத் பகவத்பாதர்களான ஆசார்யர்கள் இந்த ஸ்தோத்ர நூல் புஜங்கம் (பாம்பு) என்னுஞ் சொல்லை பெயரின் மத்தியிலே கொண்டதாயினும் (அச்சத்தைத் தராமல்) 'ரமத்கீரவாணீம்' நிஜஸ்தோத்ர ஸங்கீத ந்ருத்ய ப்ரபாங்கீம், கடாக்ஷே தயார்த்ராம்'' முதலிய ஸ்ரீ சாரதாவைப் பற்றிய அடைமொழிகளைக்கொண்ட ச்லோகங்களைக் கொண்டதாய் ச்லோகங்களின் முடிவிலே எங்கும் ''மதம்பாம்'' என்னுஞ் சொல்லால் அலங்கரிக்கப்பட்டிருப்பதால் குழந்தையின் பேச்சிலே தாயார் மகிழ்வதுபோல ஜகதம்பிகையின் மனத்தை சுலபமாகத் தயையாலே நனைந்ததாகச் செய்துகொண்டும் அச்சத்தை நீக்கி தேவியின் அனுக்ரக மேன்மையை விளக்குவதாகியும் சில இடங்களில் எல்லையில்லாததாய் கட்டுக்கடங்காததாய் அதனாலேயே இத்தகையது என்று எண்ணவொண்ணாததாய் மனம் முதலியவற்றாலே அறியமுடியாததாய் விளங்கும் பொருள் என்று அடைமொழிகளையிட்டு ஸ்ரீ சாரதாவே உபநிஷத்துக்களில் விளக்கப் பெற்ற பிரும்மத்தின் சக்தி வடிவினள் என்பதைப் போதித்தும் வேறோரிடத்திலே ''குரங்கே துரங்கே

ம்ருகேந்த்ரே ககேந்த்ரே" முதலிய அடைமொழிகளை யிட்டு இந்த தேவியே துர்கை, மஹாமாயாதிரஸ் கரணி, பத்ரகாளி, மஹாலக்ஷ்மி, ஸ்ரீ தேவி முதலிய ஸ்வரூபங்கள் என்பதை நன்கு விளக்கி சரத்காலத்து நவராத்திரித் திருநாட்களிலே துர்காலக்ஷ்மீ ஸரஸ்வதி யாகப் பூஜிப்பதை வருணித்தும் மற்றோரிடத்திலே "பவாம்போஜநேத்ராஜஸம்பூஜ்யமானும்" முதலிய சொற்றொடராலே சிவன், விஷ்ணு, பிரும்மா என்போ ராலும் நன்கு பூஜித்தற்குரியவள் என்பதை விளக்கி "தனீயாம்ஸம் பாம்ஸும்", "கிராமாஹுர்தேவீம் த்ருஹிணக்ருஹிணீமாகமவித:" என்பவை முதலாக 'ஸௌந்தர்யலஹரீ'யிலே வருணிக்கப்பெற்ற ரீதியிலே ஸ்ரீ சாரதா பரப்பிரும்மத்தின் இராணி என்பதை உறுதிப் படுத்தியும் மனதிற்கு நிறைந்த ஆனந்தத்தை அளிக் கின்றது.

"ஸ்ரீஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்"திலே ஒளிரும் "தசச்லோகீ" என்றும் முத்துமணிக்கோவையும் ஓரிடத்திலே "யா வேதாந்தார்(த்)தத்த்வைகஸ்வ ரூபா பரமார்(த்)தத:" என்னும் இம்மொழியாலே உபநிஷத்துக்களிலே விளக்கம்பெற்ற பரமாத்மாவின் உருவமே ஸ்ரீஸரஸ்வதி என்பதையும் வேறோரிடத்திலே 'யா ஸாங்கோபாங்கவேதேஷு சதுர்ஷ்வேகைவ கீயதே' என்று சொல்லுவதாலே "ஸர்வே வேதா: யத்பத மாமனந்தி" என்பது முதலான சுருதி வசனங்களாலே பெறப்பட்ட உண்மை "எல்லா வேதங்களாலும் உணர்த்தப்பெற்ற பரம்பொருள் இவளே" என்பதை யும் இன்னுமோரிடத்திலே "அத்யாத்ம மதிதைவஞ்ச தேவானும் ஸம்யகீச்வரீ ப்ரத்ய காஸ்தே" என்னும் அடைமொழியால் அப்பரம்பொருளான ஸரஸ்வதியே அந்த அந்த சரீரங்களை உடையவயான ஜீவர்களி னின்றும் பிரிக்க இயலாத ப்ரத்யகாத்மா என்று "கச்சித் தீர: ப்ரத்யகாத் மானமைக்ஷத்" "ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்ன: பச்யத்யன்யமீசம்", "அங்குஷ்ட

மாத்ர: புருஷ: தம் வித்யாசுக்ரமம்ருதம்''; ''க்ஷேத்ரேஸ்மம் சாபி மாம் வித்தி'' இவை முதலானவை ச்ருதி ஸ்ம்ருதிகளிலே கோஷிக்கப்படுவதையும் விளக்குவதாகி ''யாம் விதித்வாகிலம் பந்தம் நிர்மத்யாகிலவர்த்மனு, யோகீ யாதி பரம் ஸ்தானம் ஸாமாம் பாது ஸரஸ்வதீ'' என்று முடிவிலே சொன்ன பிரகாரம் ஸ்ரீஸரஸ்வதியை அறியும் ஞானத்தாலே எல்லா பந்தங்களினின்றும் விடுதலை பெறுவதாகிய பெரு நலத்தைப் பெறுவதையும் மிகத் தெளிவாக நிருபிக்கின்றது.

பொருளை நன்குணர்ந்துகொண்டு ஸ்தோத்திரத்தைக் கூறுவதால் மட்டுமே நாடிய பொருளைப் பெற விரும்புகின்றவர்களுக்கும்(வேறொன்றையுமே விரும்பாத) பக்தர்களுக்கும் உபகாரஞ் செய்ய விரும்பி, நாட்டு மொழியிலமைந்த மொழிபெயர்ப்போடு மேற்சொன்ன நூல்கள் இரண்டையும் அச்சிட்டு எம்முடைய ஸந்நிதியிலேயே சமர்ப்பிக்கப்பட்டதைப் பார்வையிட்டு, களிப்புற்ற மனத்தோடு இந்த ஸ்தோத்ரம் தசச்லோகீ என்னும் இரண்டு நூல்களாலும் ஸ்ரீசாரதாவையும் ஸரஸ்வதியையும் ஒருமுகப்பட்ட சித்தத்தோடு ஆராதித்து பக்தவுலகம் விரும்பிய வித்யைகளைப் பெற்று மேன்மேலும் உயர்கின்ற நலன்களை அடைவதாகுக என்றும் இவ்வாறு நல்லோர்களை இன்புறச் செய்வதிலேயே கவனங்கொண்ட ஸ்ரீ கிரி அச்சுக்கூடத்து அதிகாரிகளுக்கு பெருநலன்கள் இடையூறின்றிப் பெருகுவதாலெழுகின்ற இன்பத்தை பிறைச்சந்திரனைச் சூடிய பெம்மான் மிகுதியாக அருளுவாராக என்றும் இந்த இரு நூல்களும் ஸ்ரீசந்திரமௌளீசுவரருடைய கிருபையினாலே தங்கு தடையற்ற பிரசாரத்தை அடைவனவாக என்றும் ஆசீர்வதிக்கின்றோம்.

விஜயயாத்ராஸ்தானம் :
வேங்கடாத்ரி அகரம் என்னும்
அக்ரஹாரம்
ஸர்வதாரிஸம்: சைத்ர பஹுல
ப்ரதமை: ஸ்திரவாரம்

நாராயண ஸ்ம்ருதி:

ஓம்

ஸ்ரீ மஹாஸரஸ்வத்யை நம:

ஒன்றேயான பரம்பொருளுக்கு நாமமோ ரூபமோ யாதொன்றும் இல்லை. அந்த பரம் பொருளைத்தவிர வெறொன்றும் இல்லையாததால், அதன் உண்மையை விளக்க இயலாது. 'இதன்று, இதன்று' என்றுதான் வேதங்களாலும் கூற இயலும். மற்ற படி வேத புருஷனுடைய மனதிற்கும் வாக்கிற் குமே எட்டாத தன்மையுடையது கடவுள் என்னும் பரம்பொருள். ஆனல் அந்தப் பொருளே நாமம் ரூபம் முதலிய குணங்களோடு விளங்குகின்றது: இவ்வாறு விளங்கும் ஸகுணப் பிரும்மத்தை உபா ஸிப்பதினலேதான் ஞானமும் ஞானத்தால் மோக்ஷ மும் உண்டாகவேண்டும்.

ஞான மார்க்கத்தை விளக்கிக்காட்டும் மூர்த்தி யாக அமைந்த ஸகுணப் பிரும்ம வடிவமே மஹா ஸரஸ்வதி. உபாஸனைக்கு எளியதான மூர்த்தி தாய் வடிவமாக அமைந்த மூர்த்தியே யன்றே? இவ் வுண்மையை விளக்கியே சக்தி வழிபாடு என்னும் துறை வகுக்கப்பெற்றது. கடவுளை பராசக்தியாக வழிபடுதல் பிள்ளைமனம் படைத்த மக்கள் அனை வருக்கும் சுலபம். பவானி என்றும் அம்பிகை என்றும் சொல்லப்படும் சக்தியே மஹாஸரஸ்வதி யாகவும் சொல்லப்படுகிருள்.

மஹாஸரஸ்வதியின் வடிவமே ஆத்ம ஞானத்தை போதிப்பதாக உள்ளது. அவளுடைய திருமேனி தூய வெண்மை நிறம். அவள் வாஹனமும் வெண் ணிறங்கொண்ட ஹம்ஸம்; அவள் வீற்றிருப்பது ஒரு வெள்ளைத் தாமரை. அவள் நம்முடைய

ஹ்ருதயத்திலே என்றும் ஆனந்தமாக இருக்கவேண்டு மென்றால் நாம் நம்முடைய ஹ்ருதயத்தை தூய வெண்தாமரை மலராகச் செய்துகொள்ளவேண்டும் அவ்வாறு ஹருதயம் சுத்தமாவதற்கு நம்முடைய உடலை தேவியானவள் மீட்டி இன்னிசை பொழிவ தற்கான வீணையாகக் கொள்ளவேண்டும் என்றும் பிரார்த்திக்கவேண்டும். நம்முடைய நாக்கிலே என் றும் ஸத்யமே நிலைபெற்றிருக்க வேண்டுமென்றும் பிரார்த்திக்கவேண்டும். தேவி கையிலே வைத்துக் கொண்டிருக்கும் ஜபமாலையும் புஸ்தகமும் நமக் காகவே யன்றோ ?

தேவியின் ரூபத்தை ஸதா த்யானஞ் செய்ய வேண்டும். அவளுடைய அனந்தகல்யாண குணங் களை விளக்கும் நாமங்களை ஸதா ஜபம் செய்ய வேண்டும். ஜப யக்ஞமே எல்லா யாகங் களிலும் சிறந்தது. "என்னுடைய மனமாகிய மத யானையை ஒடுக்கி தரும மார்கத்திலே நல்வழிப் படுத்துவதற்கன்றோ உன் கையிலே உபதேசம் என் னும் அங்குசமிருக்கின்றது. என்னுடைய சித்தமாகிய குரங்கை வசப்படுத்துவதற்கன்றோ உன் கையில் அன்பு என்னும் பாசத்தைக் கொண்டுள்ளாய்" என்று தேவியை நோக்கி நம்மை ஏவிப் பணி கொள்ளுமாறு பிரார்த்திக்கவேண்டும்.

பரம் பொருளின் மூர்த்திகள் எட்டு; ஆகையால் பரசக்தியாகிய மஹாசரஸ்வதியின் மூர்த்திபேதங் களும் எட்டே; அவற்றுள் அடங்கிய தத்துவங்களைத் தியானித்து உணரவேண்டும், அவை அனைத்தும் ஒன்றே என்பதை தேவியின் வாழ்னங்களைக் கூறும் சுலோகத்திலே ஆதி ஆசார்யர்களான ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் விளக்கியிருக்கிறார்கள். தமம்ஸ்லோகீ ஸ்துதியும் இவ்வுண்மையை ஏகா என்னும் பதத்தாலும் வேறு பலவகைகளாலும் வற்புறுத்துகின்றது.

ஞான ஸ்வரூபிணியான சார்தாதேவியாக பரப் பிரும்மத்தை உபாஸிப்பது தொன்றுதொட்டு வந்த வழக்கம்; வேத பாகங்களிலே இந்த உபாஸனு மார்க்கம் கூறப்பட்டுள்ளது. பாரதவருஷத்தின் சிரோபாகமாகக் கொள்வதற்கான பெருமை வாய்ந்த காச்மீரத்திலே இவ்வழக்கம் சிறந்து விளங்கிற்று என்பதை ஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்தாலும் அறிகிறோம். காச்மீர தேசத்தின் வட எல்லையாக அமைந்தது சாரதாமடம் என்னும் தேவி நிலயமுள்ள நகரம். தமிழ் நாட்டவர்க்கு இச் சிறந்த உபாஸனு மார்க்கத்தை விளக்கிக்காட்டவே, ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் சிருங்கேரியிலே சாரதா பீடம் ஒன்றை ஸ்தாபித்து சாரதா புஜங்கப்ரயாதாஷ்டகத்தைப் பாடிக் காட்டிஞர்கள். சரத்காலத்தில் நாம் கொண்டாடும் ஸரஸ்வதி பூஜையின் உட்கருத்தை நன்குணர்ந்தால் இந்த சுலபமான உபாஸனையை அநுஷ்டித்து, எல்லா துக்கங்களையும் நீக்குவதும், எல்லா இன்பங்களையும் சேர்த்துத் தருவதுமான ஆத்ம ஞானத்தைப் பெறுவது ஸாத்யமாகும். இதுவே உபநிஷத்தால் போதிக்கப்படும் மார்க்கம்.

வேதாந்தத்தின் உட்பொருள்தான் கடவுள்; அதன் தன்மை யாருக்கும் சொல்லால் விளங்காது. அனுபவ வாயிலாகத் தான் விளங்கும். அனுபவம் உண்டாவதற்கு பக்தி சிரத்தையோடு செய்யும் உபாஸனையும் ஜபம் முதலிய கர்மாக்களுமே காரணங்கள். அவற்றிற்காகவே நாம ரூபங்களைப் பரம் பொருள் மேற்கொண்டுள்ளது, அப்பரம்பொருள் ஒன்றுமட்டுமே உள்ளது; அதுவே எழுத்து, சொல், வசனம் முதலிய சப்தவடிவு கொண்டு விளங்குவது. அதற்கு ஆதியுமில்லை, அந்தமுமில்லை. எல்லாத் தேவதைகளும் அதன் வடிவங்களே; எல்லாம் அதன் ரூபங்களே; மூவுலகத்

திலுமுள்ள எல்லா பொருட்களிலும் உட்புகுந்து அவற்றிற்கெல்லாம் ஆதாரமாக இருப்பதும் அப் பரம்பொருளே. நாம் ஜீவர்களாக விளங்குவதும் அதுவே; தியான சமாதியால் உட்கண் பெற்ருல் மட்டுமே அதனைக் காணலாம்; "அது எங்கும் நிறைந்தது; ஞானமயமானது" என்று உணரலாம். பஞ்சபூதமயமாயும், ஜோதிமயமாயும், ஜீவமயமாயும் எட்டுவகைப்பட்டு விளங்குவதும் அதுவே. வேதங்கள் முதலிய உபதேச மொழிகள் அனைத்தும் அதனை விளக்கவே முயலுகின்றன. அது பரிபூர்ணமான ஆனந்தமயமானது; ஆகையால் அதுவே பூர்ணமான ஆனந்தத்தைத் தரக்கூடியது. அதை தியானிப்பதிலேயே லயித்து நாம ரூபங்கள் முதலிய பேதங்களைக் கடந்து, அதனோடு ஒன்ருக வேண்டும். இதுதான் தபஸ்லோகியின் பரம தாத்பர்யமாகும்.

———

॥ श्रीः ॥



# ஸ்ரீ சாரதாஷ்டகம்

सुवक्षोजकुम्भां सुधापूर्णकुम्भां
प्रसादावलम्बां प्रपुण्यावलम्बाम् ।
सदास्येन्दुबिम्बां सदानोष्ठबिम्बां
भजे शारदाम्बामजस्रं मदम्बां ॥ १ ॥

ஸுவக்ஷோஜகும்பாம் ஸுதாபூர்ணகும்பாம்
ப்ரஸாதாவலம்பாம் ப்ரபுண்யாவலம்பாம்
ஸதாஸ்யேந்துபிம்பாம் ஸதானோஷ்டபிம்பாம்
பஜேஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம்

ஸுவக்ஷோஜகும்பாம் = அழகிய கலசங்கள் போன்ற ஸ்தனங்களையுடையவளும் ஸுதாபூர்ண கும்பாம் = (அந்த ஸ்தனங்களாலே) அமுதத்தால் நிறைந்த பூர்ணகலசங்களை யுடையவளாய் விளங்கு பவளும் ப்ரஸாதாவலம்பாம் = அருள் என்பதைக் கைப்பற்றியவளும் ப்ரபுண்யாவலம்பாம் = (அதனாலே) சிறந்த புண்யவான்களுக்குப் பற்றுக்கோடான அவ் வருளோடு விளங்குபவளும் ஆஸ்யேந்துபிம்பாம் = சந்திரமண்டலம் போன்ற திருமுகமண்டலத்தை யுடைய

வளும் ஸதாஞ்ஜேஷ்டபிம்பாம் = (அந்த திருமுக மண்டலத்தினின்று) அமுதம்போல் இன்மொழிகளாகிய ரஸத்தைப்பொழிகின்ற (அல்லது பரிசுத்தமான கோவை கனிபோன்ற) உதடுகளை யுடையவளுமான ஶாரதாம்பாம் = சாரதாம்பாள் என்னும் மதம்பாம் = என் தாயை அஜஸ்ரம் = இடைவிடாது ஸதா = எப்பொழுதும் பஜே = போற்றுகிறேன்.

'தாயை தெய்வமாகக் கொள்' என்பது வேத வாக்கு. பரபிரும்மத்தின் இராணியாக விளங்கும் சாரதாதேவியே மக்கள் அனைவருக்கும் தாய். ஆதலின் அவளே என்னுலும் தாய்த் தெய்வமாக வணங்கத் தக்கவள். இதுபற்றியே இந்த ஸ்தோத்திரத்தை யருளிய ஸ்ரீ சங்கரபகவத்பாதர்களான ஜகத்குரு நாம் எல்லோரும் ஸ்ரீ சாரதாதேவியைப் போற்றி அவளுடைய அருளால் ஞானமும் ஞானத்தால் மோக்ஷமும் பெறவேண்டும் என்று கருதி ஸ்ரீ சாரதாதேவியை ஸ்ரீ சிருங்ககிரியிலேயே பிரதிஷ்டை செய்தும் இந்த அஷ்டகத்தைப் பாடியும் தம்மைப்போலவே நாமும் வழிபடுமாறு அனுஷ்டித்துக் காட்டுகிருர்..

பாலருவாயர்களான பிள்ளைகளின் கண்ணுக்கு இனியதாய் அழகியதாய்த் தோற்றுவது தாயாரின் வக்ஷஸ்தலமேயாகும். "ஸ்தனந்த்ய ப்ரஜை ஸ்தனத்திலே வாய்வைக்கும்போலே" என்பது பழமொழி. இந்த கும்பங்களிலே தேவாமிர்தம் நிறைந்துள்ளது; தேவி நமக்குத் தருவதான அமிர்தமானது ஞானமேயாகும்.

தன் குழந்தைக்கு தன் அன்பை அளிக்கா விட்டால் தரிக்கமாட்டாத தாயைப்போலவே, அருளை அவலம்பனமாகக்கொண்டு விளங்குகிருள் சாரதாதேவி; அவளுடைய வரதஹஸ்தம் இதைக் காட்டுகின்றது. சிறந்த புண்யவான்களாகிய தேவியின் மக்கள் எல்லோ

ரும் தங்களுக்கு பற்றுகோடாகத் தேவி அளிக்கும் ஞானம் என்னும் அவலம்பனத்தைப் பெறுகிருர்கள்.

பூர்ணசந்திர மண்டலத்தைப் போல அமுதம் பொழிந்து கொண்டிருக்கிறது தேவியின் திருமுக மண்டலம்; எப்படி என்ருல் கோவைக்கனிபோன்றவை யான தேவியின் உதடுகளினின்றும் வேதமொழிகள் ஞானமிர்தத்தைப் பொழிந்த வண்ணமாய் நமக்கு அபயமளிக்கின்றன.

இப்படியெல்லாம் எனக்குத் தாயாராக வாய்த்த தேவியின் பெயரைப் பல தடவைகளாகச் சொல்லி அவளையே இடைவிடாமல் நான் வழிபடுவேன். அவள் பெயர் **சாரதாம்பா** என்பது.

**शरत्काले पुरा यस्मान्नवम्यां बोधिता सुरैः।**
**शारदा सा समाख्याता पीठे लोके च नामतः॥**

என்றவாறும் 6–வது சுலோகத்தில் சொல்லிய வாறும் ஆதியிலே சரத்காலத்து மஹாநவமியன்று தேவர்களால் எழுப்பி மஹாபீடத்திலே கொலுவிருக்கு மாறு வேண்டப்பெற்றவள் என்பதால் அந்த மஹா பீடத்தில் அமர்ந்திருக்கும் தேவி உலகெங்கும் **சாரதா** என்று பெயர் பெற்ருள் என்றும் கொள்ளலாம்.

அவலம்பனமாக இருப்பதால் தாரகமும் ஞானு மிர்தத்தைத் தருவதால் போஷகமும் உதடுகளினின்று மதுரமான மொழிகளைப் பெருகச் செய்வதால் போக்கியமு மாய் இருக்கிருள் தேவி என்பதும் கருத்து.

———

कटाक्षे दयार्द्रां करे ज्ञानमुद्रां
कलाभिर्विनिद्रां कलापैस्सुभद्रां ।
पुरस्त्रीं विनिद्रां पुरस्तुङ्गभद्रां
भजे शारदाम्बामजस्त्रं मदम्बाम् ॥ २ ॥

கடாக்ஷே தயார்த்ராம் கரே ஜ்ஞானமுத்ராம்
கலாபிர்விநித்ராம் கலாபைஸ்ஸுபத்ராம்
புரஸ்ரீம் விநித்ராம் புரஸ்துங்கபத்ராம்
பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம்

கடாக்ஷே = கடைக்கண்ணிலே தயார்த்ராம் = தயையால் ஈரித்து இருப்பவளும் கரே = (வலக்) கையிலே ஜ்ஞானமுத்ராம் = ஞானத்தை விளக்கும் சின்முத்திரையைக் கொண்டவளும் கலாபி: = கலைகள் என்னும் இதழ்களால் விநித்ராம் = மலர்ந்த பூவாகியவளும் கலாபை: = மயிற்பீலிகளால் ஸுபத்ராம் = மங்களகரமான அழகு வாய்ந்தவளும் புரஸ்ரீம் = முதன்மை பெற்றவளும் விநித்ராம் = (சோம்புதல் சிறிதுமின்றி எப்பொழுதும்) விழித்துக்கொண்டிருப்பவளும் புரஸ்துங்கபத்ராம் = துங்கபத்திரையின் கரையிலே அமர்ந்திருப்பவளுமான ஶாரதாம்பாம் = சாரதாம்பாளாகிய மதம்பாம் = என் தாயை அஜஸ்ரம் = இடைவிடாது பஜே = போற்றுகிறேன்.

ஸகலகலாவல்லியாகிய சாரதா தேவியினிடமிருந்தே இலௌகிகக் கலைகளும் வைதிக ஞானமுமே விளக்கமுறுகின்றன; எல்லோருக்கும் முதன்மையானவள் என்பது நன்கு விளங்குமாறு மயிர்ப்பீலிகளைத் தலையிலே அணிந்துகொண்டு துங்கபத்ரா நதிக்கரையிலே ஸிம்ஹாஸனத்திலே வீற்றிருக்கிறாள்; தன்னுடைய மக்களாகிய என்போன்றவர்களைக் காப்பதிலே ஊக்கமுடையவளாகிய தாய் எப்பொழுதும் விழித்தவண்ணமாய் தன் கடாக்ஷங்களின் மூலமாய் தயையைப் பெருக்கிக்கொண்டும் சின்முத்திரையால் ஞானத்தைப் புகட்டிக்கொண்டும் இருக்கிறாள்.

ललामाङ्कफालां लसद्गानलोलां
स्वभक्तैकपालां यशः श्रीकपोलाम् ।
करेत्वक्षमालां कनत्प्रत्नलोलां
भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥ ३ ॥

லலாமாங்கபாலாம் லஸத்கானலோலாம்
ஸ்வபக்தைகபாலாம் யஶ: ஶ்ரீகபோலாம்
கரே த்வக்ஷமாலாம் கனத்ப்ரத்னலோலாம்
பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம்

லலாமாங்க-பாலாம் = திருநெற்றியிலே திலகம் பொட்டையுடையவளும் லஸத்கானலோலாம் = பாட்டிலே அதிக விருப்பத்தையுடையவளாய் விளங்குபவளும் ஸ்வபக்தைக பாலாம் = தன் அடியார்களான பக்தர்களுக்கு பாதுகாப்பை யளிப்பதில் ஒப்பற்றவளும் யஶ: ஶ்ரீகபோலாம் = புகழ் என்னும் அழகுடன் விளங்கும் கன்னங்களையுடையவளும் கரே து அக்ஷமாலாம் = கையிலோ ருத்ராக்ஷ மாலையைக் கொண்டவளும் கனத்ப்ரத்னலோலாம் = சிறந்து விளங்குகின்ற புராதனப் பொருளாகிய பரப்பிரும்மத்திலே ஈடுபட்டவளுமான ஶாரதாம்பாம் = சாரதாம்பாளாகிய மதம்பாம் = என் தாயை அஜஸ்ரம் = இடைவிடாது பஜே = போற்றுகிறேன்.

கையிலே ஜபமாலையை ஏந்திக்கொண்டு பரப்பிரும்மமாகிய தன் கணவனையே எப்போதும் தியானித்துக்கொண்டு இன்புற்றிருக்கும் என் தாயாகிய சாரதா தேவியானவள் தன்னுடைய பக்தர்களாகிய நாம் எல்லோரும் ஸ்தோத்திரஞ்செய்து பாடும் பாடல்களிலே ஈடுபட்டவளாய், செவிசாய்த்து, தன் அழகிய கன்னங்களிலே தூய புகழைப்போல விளங்கும் புன்முறுவலும் நெற்றியிலே திலகமும் அழகுறத்தோன்றுமாறு வீற்றிருப்பதைக் கண்டு நானும் அவளைப் பாடிப் புகழ்வேன்.

सुसीमन्तवेणीं दृशा निर्जितैणीं
रमत्कीरवाणीं नमद्वज्रपाणीम् ।
सुधामन्थरास्यां मुदा चिन्त्यवेणीं
भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥ ४ ॥

*ஸுஸீமந்தவேணீம் த்ருஶா நிர்ஜிதைணீம்*
*ரமத்கீரவாணீம் நமத்வஜ்ரபாணீம்*
*ஸுதாமந்தராஸ்யாம் முதா சிந்த்யவேணீம்*
*பஜே ஶாரதாம்பா மஜஸ்ரம் மதம்பாம்*

ஸுஸீமந்தவேணீம் = அழகாக வகுடு எடுத்து வாரிப் படிந்த கூந்தலையுடையவளும் த்ருஶா நிர்ஜிதைணீம் = தன் கண்களால் பெண்மானை வென்றவளும் ரமத்கீரவாணீம் = கிளியின் சொற்களிலே இன்புறுபவளும் நமத்வஜ்ரபாணீம் = வச்சிராயுதத்தைக் கையிற் கொண்ட தேவேந்திரனாலும் வணங்கப்பெற்றவளும் ஸுதாமந்தராஸ்யாம் = அமிர்தமயமாகிய பெருமை பெற்ற திருமுகமண்டலத்தையுடையவளும் முதா = ஆனந்தத்தோடு சிந்த்யவேணீம் = சிந்தனை செய்யத் தகுந்த கூந்தலையுடையவளுமான ஶாரதாம்பாம் = சாரதாம்பாளாகிய மதம்பாம் = என் தாயை அஜஸ்ரம் = இடைவிடாது பஜே = போற்றுகிறேன்.

தாய்த் தன்மையை அடையாத இளம்பெண்கள் தங்கள் கூந்தலைப் பலவகையாக அலங்காரஞ்செய்து கொள்வார்கள். தாயாகும் தருவாயிலுள்ள கர்ப்பிணிக்கு ஸீமந்தம் என்னும் வகிடு எடுக்கும் சடங்கை நடத்துவார்கள். மக்கள் அனைவருக்கும் தாயாக விளங்கும் சாரதாதேவியின் கூந்தல் இவ்வாறு வகுடுபெற்று அழகாக விளங்குகின்றது; என்றாலும் இன்னும் அவளுடைய கண்களிலே, பெண் மானின் மருண்ட நோக்கைக் காட்டிலும் மருட்சி மிகுந்த இளம் பெண்ணின் மருண்ட பார்வையே காணப்படுகின்றது.

அப்படி இளமை மாருதவளாக விளங்குகிருள். தேவேந்திரன் தன்னை வணங்கிப் பிரார்த்திக்கும் பெருமையைப் பெற்றும் உதாஸீனமாய் அப்பெருமையைப் பொருட்படுத்தாமல் தான் கற்றுக்கொடுத்த சொற்களை மழலை மாருதபடி குழந்தையைப் போல திரும்பச்சொல்லும் கிளிப்பிள்ளையின் பேச்சைக் கேட்பதையே இன்பமாகக் கொள்கிருள். இத்தகைய தேவியின் அமிர்தமயமான திருமுகமண்டலத்தையும் அத் திருமுகமண்டலத்திற்குப் பரபாகமாயமைந்து அழகு செய்வதால் நம்மை மகிழ்விக்கும் கூந்தலையும் நோக்கிய வண்ணமாய் ஒரு சிறிதும் இடைவிடாது போற்றி தாயின் மணிக்கட்டிலேயிருந்து கூவும் கிளிப் பிள்ளையைப்போல நானும் என் தாய்க்கு இன்பமூட்டுவேன்.

---

सुशान्तां सुदेहां दृगन्ते कचान्तां
लसत्सल्लताङ्गीमनन्तामचिन्त्याम् ।
स्मरेत्तापसैः सङ्गपूर्वस्थितां तां
भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥ ५ ॥

ஸுசாந்தாம் ஸுதேஹாம் த்ருகந்தே கசாந்தாம்
லஸத்ஸல்லதாங்கீமனந்தாமசிந்த்யாம்
ஸ்மரேத்தாபஸை: ஸங்கபூர்வஸ்திதாம் தாம்
பஜே ஶாரதாம்பா மஜஸ்ரம் மதம்பாம்

ஸுசாந்தாம் = நல்ல அமைதியோடு விளங்குபவளும் ஸுதேஹாம் = அழகிய திருமேனியையுடையவளும் த்ருகந்தே கசந்தாம் = கடைக்கண் புறத்திலே கூந்தலின் முனைப்பாகம் சுருண்டு தோன்றும்படி இருப்பவளும்; லஸத்ஸல்லதாங்கீம் நல்ல பூங்கொடிபோன்று அமைந்த அங்கங்களோடு விளங்கு

பவளும் அனந்தாம் அசிந்த்யாம் = (இவ்வாறு கண் வட்டத்திற்குள்ளே அகப்படும் அளவுடைய திருமேனி யுடையவளாயினும்) முடிவில்லாததும் மனதினுற் கருத வொண்ணுததுமான இயல்பினளும் ஸ்மரேத்தாபஸை = தன்னை நினைத்துத் தவம் செய்யும் முனிவர் களால் ஸங்கபூர்வஸ்திதாம் = அவர்கள் குழுவிற்கு முன்பு தோன்றி தலைமைபெற்று வீற்றிருப்பவளுமான ஶாரதாம்பாம் = சாரதாம்பாளாகிய மதம்பாம் = என். தாயை அஜஸ்ரம் = இடைவிடாது பஜே = போற்றுகிறேன்

சிந்தனைக்கு எட்டாதவளாய் முடிவில்லாத எழில் வடிவங்களையுடைய தேவியை முனிவரர்கள் தங்க ளுடைய தபோபலத்தாலும் தியானசக்தியாலும் தங்கள் ஸமூஹத்திற்குத் தலைவியாக மூர்த்தீகரித்து விளங்கும் படி அமர்த்திக்கொண்டிருக்கிருர்கள். அப்பொழுது அவள் கடைக்கண்களின் அருகிலே சுருண்ட கூந்தல் அழகாகத் தவழ்ந்திருப்பதையும் பூங்கொடியைப்போல அவளுடைய திருமேனி விளங்குவதையும், அத்திரு மேனியிலேயே அமைதி குடிகொண்டிருப்பதால் தேவி சாந்தமே வடிவெடுத்தாற்போல் இருப்பதையும் கண்டு நானும் களித்துப்போற்றுவேன். அவள் எனக்கும் தாயாகி காட்சி கொடுக்கிருள்.

———

कुरङ्गे तुरङ्गे मृगेन्द्रे खगेन्द्रे
मराले मदेभे महोक्षेऽधिरूढाम् ।
महत्यां नवम्यां सदा सामरूपां
भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥ ६ ॥

குரங்கே துரங்கே ம்ருகேந்த்ரே ககேந்த்ரே
மராலே மதேபே மஹோக்ஷே திருடாம்
மஹத்யாம் நவம்யாம் ஸதா ஸாமரூபாம்
பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம்

குரங்கே = கலைமான்மீதும் துரங்கே = வேகமாகச் செல்லும் ம்ருகேந்த்ரே = சிங்கத்தின்மீதும் ககேந்த்ரே = பறவைகளுக்கு அரசனான கருடன் மீதும் மராலே = அன்னப் பறவையின் மீதும் மதபே = மதயானையின் மீதும் மஹோக்ஷே = பெரிய காளைமாட்டின்மீதும் அதிருடாம் = ஏறிச்செல்பவளும் மஹத்யாம் நவம்யாம் = (சரத் காலத்து) மஹாநவமியன்று ஸாமரூபாம் = சாந்தவடிவங்கொண்டு இனியவளாய் விளங்குபவளுமான (அல்லது, ஸாமவேத ஸ்வரூபிணியாய் விளங்குபவளுமான) ஶாரதாம்பாம் = சாரதாம்பாளாகிய மதம்பாம் = என் தாயை ஸதா = எப்பொழுதும் அஜஸ்ரம் = இடைவிடாது பஜே = போற்றுகிறேன்.

பரப்பிரும்மமானது திருமூர்த்திகளாகக் காட்சி கொடுக்கும்போது, பரப்பிரும்ம மஹிஷியும் துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீ என்று மூன்று விதமாகக் காட்சி யளிக்கிருள். ஆகையால், பக்தர்கள் சாரதாதேவியின் பூஜைக்குரிய சரத்காலத்து நவராத்திரியின் கடைசி நாளாகிய மஹாநவமியன்று; தங்கள் தங்கள் இஷ்டப் பிரகாரம் துர்க்கையாகவோ பார்வதியாகவோ, லக்ஷ்மீ தேவியாகவோ ஸரஸ்வதீ தேவியாகவோ தியானித்துப் பூஜிக்கிருர்கள்; அப்பொழுது அவரவர்கள் தியானித்தபடியே, கலைமானின் மீது துர்க்கையாகவும் சிங்கத்தின்மீது ஏறிவரும் பத்திரகாளியாகவும், விருஷபத்தின்மீதமர்ந்த பார்வதியாகவும், மதயானையின்மீது வீற்றிருக்கும் மஹாலக்ஷ்மியாகவும், கருடன்மீது தோன்றும் ஸ்ரீதேவியாகவும், அன்னவாஹனத்தில் அமர்ந்த ஸரஸ்வதியாகவும் காண்போர் கண்களுக்கு இனியவளாகக் காட்சியளிக்கிருள்; அது போதாது

எனக்கு; சாரதாம்பாள் என் சொந்தத் தாயாராகையால் நான் இடைவிடாது போற்றுமாறு இனியவளாய் எனக்கு எப்பொழுதும் காட்சியளிக்கவேண்டும்.

---

ज्वलत्कान्तिवह्निं जगन्मोहनाङ्गीं
भजे मानसाम्भोजसुभ्रान्तभृङ्गीं ।
निजस्तोत्रसंगीतनृत्यप्रभाङ्गीं
भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥ ७ ॥

ஜ்வலத்காந்திவன்ஹிம் ஜகன்மோஹனங்கீம்
பஜே மானஸாம்போஜஸுப்ராந்தப்ருங்கீம்
நிஜஸ்தோத்ர–ஸங்கீத-ந்ருத்யப்ரபாங்கீம்
பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம்

ஜ்வலத்காந்திவன்ஹிம் = காந்தி என்னும் அக்கினியாலே ப்ரகாசிப்பவளும் ஜகன்மோஹனங்கீம் = உலகனைத்தையும் மயக்கும் அங்க ஸௌந்தர்யமுடையவளும் மானஸாம்போஜ-ஸுப்ராந்த-ப்ருங்கீம் (பக்தர்களின்) மனங்கள் ஆகிய தாமரைகளிலே (அங்குள்ள பக்தியாகிய மகரந்தத்தை யுண்டு) மயங்கித் திரியும் வண்டாகியவளும் நிஜஸ்தோத்ர - ஸங்கீதந்ருத்யப்ரபாங்கீம் = தன்னைப் பற்றியவையான ஸ்துதிகளாலும் பாடல்களாலும் ஆடல்களாலும் அழகு பெற்று விளங்கும் அங்கங்களுடையவளுமான ஶாரதாம்பாம் = சாரதாம்பாளாகிய மதம்பாம் = என் தாயை அஜஸ்ரம் = இடைவிடாது பஜே = போற்றுகிறேன்.

தீக்கொழுந்துபோல் ஒளிரும் தேக காந்தியையுடைய என் தாயின் திருமேனியழகு எவர் மனதையும் மயக்கி வசப்படுத்தக்கூடியது; அத்தகைய பெருமையுடைய தேவியே, பக்தர்களின் மனதிலேயுள்ள அகத்தழ்கிலே

ஈடுபட்டு அங்குள்ள தேனைப் பருகி மருண்டவண்டைப் போல் அவர்கள்மனதிலே படிந்து கிடக்கிருள். மற்றவர்கள் தேவியை ஸ்துதித்தும் பாடியும் ஆடியும் புகழ்கிருர்கள்; தேவி யாரைப்பாடியாடித் துதிப்பாள்? தன்னையே ஸ்துதித்துக்கொண்டும் பாடியாடியும் இன்புறும்போது, தேவியின் அங்கங்கள் இன்னும் அதிக காந்தியோடு பிரகாசிக்கின்றன. இப்படிப்பட்ட என் தாயை, நானும் துதித்தும் பாடிப் புகழ்ந்தும் மேன்மையுறும்படி செய்வேன்.

---

भवाम्भोजनेत्राजसंपूज्यमानां
 लसन्मन्दहासप्रभावक्त्रचिह्नाम् ।
चलच्चञ्चलाचारुताटङ्ककर्णां
 भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥ ८ ॥

*பவாம்போஜநேத்ராஜ-ஸம்பூஜ்யமாணும்*
*லஸன்-மந்தஹாஸப்ரபாவக்த்ரசின்ஹாம்*
*சலச்சஞ்சலாசாருதாடங்ககர்ணும்*
*பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம்*

*பவாம்போஜநேத்ராஜ-ஸம்பூஜ்யமாணும்*=சிவன் தாமரைக் கண்ணனுகிய விஷ்ணு, பிரும்மா இவர்களால் பூஜிக்கப்பெற்றவளும் *லஸன்-மந்தஹாஸ-ப்ரபாவக்த்ர-சின்ஹாம்*=திருமுகமண்டலத்திலே புன்முறுவலின் காந்தியை அழகுதரும் அடையாளமாக வுடையவளும் *சலத்சஞ்சலாசாருதாடங்ககர்ணும்*= எப்பொழுதும் அசைந்து மிளிர்கின்ற தாடங்கங்களால் அழகிய காதுகளை யுடையவளுமான *ஶாரதாம்பாம்*= சாரதாம்பாளாகிய *மதம்பாம்*= என் தாயை *அஜஸ்ரம்*= இடைவிடாது *பஜே*=போற்றுகிறேன்.

திருமூர்த்திகளும் வழிபடுகின்ற பெருமைவாய்ந்தவள் *சாரதா*தேவி; வணங்கி வழிபடுகின்றவர்களுடைய கோரிக்கைகளைக் கேட்ட காதுகளினின்றும் கன்னங்களுக்கு அடிக்கடி சென்று திரும்பும் தூதர்களைப் போல இரண்டு தாடங்கங்களும் காதுகளுக்கும் கன்னங்களுக்கும் இடையே ஊசலாட, அவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கியும்; அவர்களுடைய ஸ்துதிகளைக் கேட்டும் தேவி மென்னகை புரிகிருள். அந்த மந்தஹாஸமே அவள் முகத்திற்கு ஓரலங்காரமாக ஒளிர்கின்றது. இப்படி எப்போதும் புன்முறுவல் பூத்த தேவியின் திருமுகமண்டலமானது இடைவிடாது என் கண்முன் தோன்றி என் போற்றுதலையும் அங்கீகரித்து என்னையும் கடைத்தேறச் செய்வதாக.

**इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्यस्य श्रीमच्छंकरभगवतः कृतौ शारदाभुजङ्गप्रयाताष्टकं संपूर्णम् ॥**

இவ்வாறு

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்களும்

ஸ்ரீ கோவிந்த பகவத் பூஜ்ய பாதர்களின் சிஷ்யர்

களுமான ஸ்ரீமத் சங்கர பகவானுடைய நூலுள்

*ஶாரதா புஜங்கப்ரயாதாஷ்டகம்*

முற்றிற்று

---

॥ श्रीः ॥

सरस्वतीरहस्योपनिषदि श्रुता

॥ दशश्लोकी ॥

ஸ்ரீ

ஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்திலுள்ள

# தசஸ்லோகீ

—

ருஷிகள் பகவான் ஆச்வலாயனரைப் பார்த்து, ''பகவானே! எந்த உபாயத்தால் தாங்கள் தத்துவ ஞானத்தைப் பெற்றீர்கள் என்பதை எங்களுக்குக் கூறவேண்டும்'' என்று பிரார்த்திக்க, அவர் **''ஸரஸ்வதீ தசச்லோகீ''** என்னும் ஸ்துதியால் மஹா ஸரஸ்வதியை ஸ்துதித்து மேலான ஸித்தியை அடைந்தேன் என்று விடையளித்து அந்த ஸ்தோத்திரத்தை அவர்களுக்கு உபதேசித்தார். அவர் உபதேசித்த தியான ச்லோகம் வருமாறு :—

**नीहारहारघनसारसुधाकराभां**
**कल्याणदां कनकचम्पकदामभूषाम् ।**
**उत्तुङ्गपीनकुचकुम्भमनोहराङ्गीं**
**वाणीं नमामि मनसा वचसा विभूत्यै ॥**

*நீஹார ஹார-கனஸார-ஸுதாகராபாம்*
*கல்யாணதாம் கனகசம்பகதாமபூஷாம்*
*உத்துங்க-பீன-குசகும்ப-மனோஹராங்கீம்*
*வாணீம் நமாமி மனஸா வசஸா விபூத்யை*

*நீஹார-ஹார-கனஸார-ஸுதாகராபாம்* = பனி போலவும், முத்துமாலை போலவும், கர்ப்பூரம் போல வும், சந்திரனைப் போலவும் (வெண்ணிறமாக) விள ங்குபவளும் *கல்யாணதாம்* = மங்களத்தைத் தருப வளும் *கனக-சம்பகதாமபூஷாம்*=செண்பக மாலையை யும் பொன்னையும் அணிந்தவளும் *உத்துங்கபீன குசகும்ப-மனோஹராங்கீம்*=நிமிர்ந்தெழுந்த பெருத்த ஸ்தனங்களாகிய கலசங்களுடையவளாய், மனதைக் கவறும் அழகு வாய்ந்த அங்கங்களை யுடையவளு மான *வாணீம்*=ஸரஸ்வதீ தேவியை *விபூத்யை*= பெருமையான செல்வங்களையெல்லாம் பெறுவதன் பொருட்டு *மனஸா வசஸா நமாமி*=மனத்தாலும், வாக்காலும் (உடலாலும்) வணங்குகிறேன்.

வெண்மையிலோ மேன்மையிலோ தேவியின் திருமேனிக்கு ஒப்பாக ஒரு வஸ்துவையும் சொல்ல இயலாது; பனியின் குளிர்ச்சியும், முத்தின் இன் னொளியும், கற்பூரத்தின் பளபளப்பும், சந்திரனின் இன்பத்தோற்றமும் ஒருங்கே தேவியிடம் காணப்படு வதால், தேவியின் திருமேனிக்கு ஒப்பாக இவை யனைத்தையும் சேர்த்தே சொல்லவேண்டும்; வெண் மைக்கும், சமுச்சயமாக சொன்னால்மட்டுமே உவமை கூறக்கூடும். அழகும் வாசனையும் ஒருங்கே அமை ந்த பொன்னிறமான செண்பக மாலையை அணிந் துக் கொண்டிருக்கிருள். அவளை தரிசித்தாலே எல்லா மங்களங்களையும் பெறலாம். தரிசிப்பதற்கும் ஏற்ற அழகு வாய்ந்தவள். நிமிர்ந்தெழுந்த பெருங்கொங்கை களோடு விளங்குந் தாயாகிய ஸரஸ்வதீயை எல்லா நன்மைகளையும் பெறும் பொருட்டு நான் திரிகரணங் களாலும் வழிபடுகிறேன்.

'வணங்குகிறேன்' என்றதால் 'மெய்யாலும் வழி படுகிறேன்' என்பது குறிக்கப்பெற்றது. 'மனத்தால்

வணங்குதல்'—த்யானித்தல்;' வாக்கால் வணங்குதல்'—ஸ்துதித்தல்.

வசஸாம் என்றும் பாடம். அப்பொழுது வசஸாம்—விபூத்யை=வாக்கின் செல்வங்களைப் பெறும் பொருட்டு மனஸா நமாமி = 'மனத்தால் வணக்கத்தோடு த்யானிக்கிறேன்' என்று பொருள்.

---

ஏ या वेदान्तार्थतत्त्वैकस्वरूपा परमार्थतः ।
नामरूपात्मना व्यक्ता सा मां पातु सरस्वती ॥ १ ॥

யா வேதாந்தார்(த்)த-தத்வைக-
ஸ்வரூபா பரமார்(த்)தத:
நாம ரூபாத்மகா வ்யக்தா
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

யா=எவள் பரமார்(த்)தத = உட்பொருளாகப் பார்த்தால் வேதாந்தார்(த்)த-தத்வைகஸ்வரூபா = வேதங்களின் சிரஸ்ஸுகளான உபநிஷத்துகளிலே விளக்கப்பெற்ற உண்மை என்பதையே தனிவடிவாகக் கொண்டவளோ நாமரூபாத்மனு=பெயர் உருவம் இவற்ருல் வ்யக்தா=விளக்கமுற்றவளோ ஸா= அந்த ஸரஸ்வதீ=ஸரஸ்வதீ தேவியானவள் மாம்= என்னை பாது=காப்பாளாக.

या साङ्गोपाङ्गवेदेषु चतुर्ष्वेकैव गीयते ।
अद्वैता ब्रह्मणः शक्तिः सा मां पातु सरस्वती ॥ २ ॥

யா ஸாங்கோபாங்கவேதேஷு
சதுர்ஷ்வேகைவ கீயதே
அத்வைதா ப்ரஹ்மண: ஶக்தி:
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

ஸாங்கோபாங்கவேதேஷு சதுர்ஷு = அங்கங்கள், உபாங்கங்கள் இவற்ருேடு கூடின நான்கு வேதங்களிலும் யா ஏகா ஏவ = எவள் ஒருத்தி மட்டுமே கீயதே = (புகழ்ந்து) பாடப்பெறுகின்ருளோ ஸா = அந்த ப்ரஹ்மண: ஶக்தி: = பரப்ரும்மத்தின் சக்தியாகி அத்வைதா = ஒப்பற்று விளங்குபவளுமான ஸரஸ்வதீ = ஸரஸ்வதீதேவி மாம் = என்னை பாது = காப்பாளாக.

---

या वर्णपदवाक्यार्थस्वरूपेणैव वर्तते ।
अनादिनिधनाऽनन्ता सा मां पातु सरस्वती ॥ ३ ॥

யா வர்ண-பத-வாக்யார்(த்)த-
ஸ்வரூபேணைவ வர்(த்)ததே
அனுதிநிதனு’னந்தா
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

வர்ண-பத-வாக்யார்(த்)த-ஸ்வரூபணே ஏவ = எழுத்து, சொல், வாக்கியம் இவற்றின் பொருள் என்னும் இவற்றையே (தன்னுடைய) ஸ்வரூபமாகக்கொண்டு யா = எவள் வர்(த்)ததே = விளங்குகிருளோ, அனுதி-நிதனு = ஆதியும் அந்தமும் இல்லாதவளாயும் அனந்தா = (ஸ்வரூபம், ரூபம், குணம் இவற்றிற்கு) ஒரு எல்லையில்லாதவளாயும் விளங்கும் ஸா = (மனம் மொழி இவற்ருல் உணர்வதற்கும், விவரிப்பதற்கும் இயலாதவளான) ஸரஸ்வதீ = ஸரஸ்வதீ தேவி மாம் = என்னை பாது = காப்பாளாக.

---

अध्यात्ममधिदैवं च देवानां सम्यगीश्वरी ।
प्रत्यगास्ते वदन्ती या सा मां पातु सरस्वती ॥ ४ ॥

அத்யாத்மமதிதைவஞ்ச
தேவனும் ஸம்யகீஸ்வரீ
ப்ரத்யகாஸ்தே வதந்தீ யா
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

தேவானும்=தேவர்களுக்கு (அவர்களுள் ஒவ்வொருவருக்கும்) அத்யாத்மம்=அவர்களுள் புகுந்து போக்தா ஆகிய ஜீவஸ்வரூபத்தோடு விளங்கும் பரப்பிரும்மமாயும் அதிதைவம்=(அவர்களை) இயங்கச் செய்யும் தெய்வமாகவும் ஈஸ்வரீ=(அவர்களை) ஏவிப்பணி கொள்ளும் மஹாராணியாகவும், வதந்தி=வாக்கு வடிவங்கொண்டு யா=எவள் ஸம்யக் = செம்மையாக ப்ரத்யக் = அவர்களுள் ஒவ்வொருவருக்குள்ளேயும் ஆஸ்தே=வீற்றிருக்கிறுளோ, ஸரஸ்வதீ = ஸரஸ்வதீ தேவியான ஸா=அவள் மாம்=என்னை பாது=காப்பாளாக.

---

रुद्रादित्यादिरूपस्था यस्यामावेश्य तां पुनः ।
ध्यायन्ति सर्वरूपैका सा मां पातु सरस्वती ॥ ५ ॥

ருத்ராதித்யாதிரூபஸ்தா
யஸ்யாமாவேஸ்ய தாம் புன:
த்யாயந்தி ஸர்வரூபைகா
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

யஸ்யாம் = எவளிடத்தில் ஆவேஸ்ய=(தங்கள் மனதை) நிலை நிறுத்தி வைத்து தாம் புன:=அவளையே த்யாயந்தி=(முனிவர்கள் முதலிய தியானசீலர்கள்) தியானஞ் செய்துகொண்டிருக்கிறுர்களோ ருத்ராதித்யாதி-ரூபஸ்தா=ஏகாதச ருத்திரர்கள், துவாதச ஆதித்தியர்கள், அசுவனிகள் இருவர்; அஷ்டவஸுக்கள் ஆகிய முப்பத்து மூன்று தேவர்களையும்

ஆதியாகக்கொண்ட எல்லா தேவதா ரூபங்களிலும் அமர்ந்திருப்பவளாய் ஸர்வரூபா = (உயிர்கள் உயிரற்றவைகள்) எல்லாவற்றையுமே தன்னுடைய ரூபமாகக் கொண்டவளுமான ஸா = (வர்ணிக்க முடியாத) அந்த ஏகா = ஒரு தனிப்பொருளான ஸரஸ்வதீ = ஸ்ரஸ்வதீ தேவி மாம் = என்னை பாது = காப்பாளாக.

---

[अन्तर्याम्यात्मना विश्वं त्रैलोक्यं या नियच्छति ।
रुद्रादित्यादिरूपस्था सा मां पातु सरस्वती ॥ ५ ॥

அந்தர்யாம்யாத்மனா விஶ்வம்
த்ரைலோக்யம் யா நியச்சதி
ருத்ராதித்யாதி-ரூபஸ்தா
ஸா மாம் பாது ஸரஸ்வதீ
என்றும் பாடமுண்டு.

குறிப்பு:—இந்தப் பாடத்தின்படி பின்பாதியிலுள்ள சொற்களுக்கு மேலே பொருள் கூறப்பட்டுள்ளது. அதற்கு முன், பின் வருமாறு சேர்த்துக் கொள்ள வேண்டும்.

த்ரைலோக்யம் = (மேலுலகங்கள், பூமண்டலம், கீழுலகங்கள் என்று) மூவகைப்பட்ட உலகங்களைக் கொண்ட விஶ்வம் = எல்லாவற்றையும் யா = எவள் அந்தர்யாம்யாத்மனா = உள்ளே புகுந்து அந்தர்யாமியாக எப்போதும் விளங்கிக்கொண்டிருக்கும் ஆத்மஸ்வரூபத்தாலே நியச்சதி = ஆளுகின்றாளோ ]

---

**या प्रत्यक्दृष्टिभिर्जीवैर्व्यज्यमानाऽनुभूयते ।**
**व्यापिनी ज्ञप्तिरूपैका सा मां पातु सरस्वती ॥ ६ ॥**

*யா ப்ரத்யக்த்ருஷ்டிபிர் ஜீவைர்-*
*வ்யஜ்யமாநு' னுபூயதே*
*வ்யாபினீ ஜ்ஞப்திரூபைகா*
*ஸா மாம் பாது ஸரஸ்வதீ*

ப்ரத்யக்-த்ருஷ்டிபி; = அகக் கண்ணேக்கமுடைய வர்களான ஜீவை: = ஜீவர்களால் யா = எவள் வ்யஜ்ய மாநு = விளக்கமுடையவளாக அனுபூயதே = உணர்ந்து அனுபவிக்கப்படுகிருளோ, வ்யாபினீ = (எங்கும்) பரந் துள்ள தன்மையளாயும் (ஸர்வ வியாபக சக்தியுள்ள வளாயும்) ஜ்ஞப்திருபா = அறிவு வடிவாயும் ஏகா = (இரண்டாவது பொருள் ஒன்றும் தன்னைத் தவிர்த்து இல்லாததால்) ஒப்பற்ற தனிப் பொருளாயும் விளங் கும் ஸா = (வர்ணிக்க முடியாத) அந்த ஸரஸ்வதீ = ஸரஸ்வதீதேவி மாம் = என்னை பாது = காப்பாளாக

---

**नामजात्यादिभिर्भेदैरष्टधा या विकल्पिता ।**
**निर्विकल्पात्मनाऽव्यक्ता सा मां पातु सरस्वती ॥ ७ ॥**

*நாம ஜாத்யாதிபிர்-பேதை-*
*ரஷ்டதா யா விகல்பிதா*
*நிர்விகல்பாத்மநு' வ்யக்தா*
*ஸா மாம் பாது ஸரஸ்வதீ*

யா = எவள் நாமஜாத்யாதிபி: = பெயர், தோற்றம் முதலிய பேதை: = வேறுபாடுகளால் அஷ்டதா = (ஐம் பெரும் பூதங்கள், ஸூர்ய சந்திரர்கள், யஜமானன்)

என்று *எட்டுவகையாக விகல்பிதா = பிரித்து அறியப் படுகின்றுளோ நிர்விகல்பாத்மனு = பிரித்தறியவொண்ணுத தன்மையாலே (நிர்விகல்ப ஸ்வரூபத்தாலே) அவ்யக்தா = (மனதை ஆருவதாகக் கொண்ட பஞ்சேந்திரியங்களாலும்) தெளிந்துணரப் பெருத (நாமரூபங்கள் முதலியவற்றைக் கடந்த) அவ்யக்தப் பொருளோ ஸா = அந்த ஸரஸ்வதீ = ஸரஸ்வதீதேவி மாம் = என்னை பாது = காப்பாளாக.

---

व्यक्ताव्यक्तगिरः सर्वे वेदाद्या व्याहरन्ति याम् ।
सर्वकामदुघा धेनुः सा मां पातु सरस्वती ॥ ८ ॥

வ்யக்தாவ்யக்தகிர: ஸர்வே
வேதாத்யா வ்யாஹரந்தி யாம்
ஸர்வகாமதுகா தேனு:
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

வேதாத்யா = வேதங்கள் முதலான வ்யக்தாவ்யக்தகிர: = தெளிந்த பொருளுள்ளவை தெளியாத பொருள் கொண்டவை ஆகிய (இருதிறப்பட்ட) சொற்கள் ஸர்வே = எல்லாம் யாம் = எவளைப்பற்றியோ வ்யாஹரந்தி = கூறுகின்றனவோ, ஸர்வகாமதுகா =

---

* लक्ष्मीर्मेधा धरापुष्टिर्गौरी तुष्टिः प्रभा धृतिः ।
एताभिः पाहि तनुभिरष्टाभिर्मां सरस्वती ॥

லக்ஷ்மீர் மேதா தரா புஷ்டிர் கௌரீ துஷ்டி: ப்ரபா த்ருதி:
ஏதாபி: பாஹி தனுபி ரஷ்டாபிர் மாம் ஸரஸ்வதீ

என்னும் மத்ஸ்ய புராணச் சுலோகப்படியும் கொள்ளலாம். ஸப்த மாதாக்களும் தானுமாய் தேவி எட்டு வகையாகக் காட்சி தருகிருள் என்றும் கொள்ளலாம்.

எல்லா விருப்பங்களையும் (அடியார்களுக்கு) சுரக்கின்ற தேனு: = கறவைப்பசுவாக விளங்கும் ஸா = அந்த ஸரஸ்வதீ = ஸரஸ்வதீதேவி மாம் = என்னை பாது = காப்பாளாக.

---

यां विदित्वाऽखिलं बन्धं निर्मथ्याखिलवर्त्मना ।
योगी याति परं स्थानं सा मां पातु सरस्वती ॥ ९ ॥

யாம் விதித்வா'கிலம் பந்தம்
நிர்மத்யாகிலவர்த்மனா
யோகீ யாதி பரம் ஸ்தானம்
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

அகிலவர்த்மனா = பின்னப்படாது ஒன்றேயான நேர் வழியாலே அகிலம் பந்தம் = பந்தங்கள் முழுவதையும் நிர்மத்ய = சிதற அடித்து அழித்தொழித்து யாம் = எவளை விதித்வா = அறிந்து உணர்ந்து யோகி = ஞானி பரம் ஸ்தானம் = மேலான பதவியை யாதி = அடைகிறானோ ஸா = அந்த ஸரஸ்வதீ = ஸரஸ்வதீதேவி மாம் = என்னை பாது = காப்பாளாக.

---

नामरूपात्मकं सर्वं यस्यामावेश्य तां पुनः ।
ध्यायन्ति ब्रह्मरूपैका सा मां पातु सरस्वती ॥ १० ॥

நாமரூபாத்மகம் ஸர்வம்
யஸ்யாமாவேஶ்ய தாம் புன:
த்யாயந்தி ப்ரஹ்மரூபைகா
ஸா மாம் பாது ஸரஸ்வதீ

நாமரூபாத்மகம்=பெயர் வடிவு இவற்றை யுடையவையான ஸர்வம்=எல்லாவற்றையுமே யஸ்யாம்=எவளிடத்தில் ஆவேஶ்ய=புகுந்து லயமாகும்படி செய்து தாம் புன:=மீண்டும் (எல்லாம் லயமடைந்த) அவளையே த்யாயந்தி = (மனன சீலர்களான முனிவர்கள்) தியானஞ் செய்கிறார்களோ ஸா=அந்த ப்ரஹ்ம ரூபா=பரப் பிரும்ம வடிவு கொண்ட ஏகா=இரண்டற்ற பொருளான ஸரஸ்வதீ=ஸரஸ்வதீதேவி மாம்=என்னை பாது=காப்பாளாக.

மேற்கண்டவாறு, "ஸா மாம் பாது ஸரஸ்வதீ" என்ற நான்காவது பாதத்தையுடைய பத்து அனுஷ்டுப் சுலோகங்களும் தஶஶ்லோகீ என்னப் பெற்றன. இவற்றால் ஸரஸ்வதீதேவியை ஸ்துதித்துப் பூஜிப்பவர்களுக்கு தட்டுத்தடங்கல் ஒன்றும் இல்லாத கவிதையும் புக்தி முக்தி எனப்படும் இஹபர ஸுகங்களும் கிடைப்பன என்பது பலச்ருதி. "அவர்களுடைய வாக்கிலிருந்து அழகிய அக்ஷரங்களையுடைய கத்யங்களும் பத்யங்களுமாய்ப் பொழியும் இப்படி ஸரஸ்வதீ கடாக்ஷத்தைப் பெற்ற கவிக்கு முன்பின் கேட்டறியாத நூலும் தானாகவே ஸ்புரிக்கும்" என்று இந்த ஸ்தோத்ரத்தாலே ஸ்துதித்து ஸாக்ஷாத்தாக ஸரஸ்வதீ தேவியைப் ப்ரத்யக்ஷமாகக் கண்ட ஆச்வலாயன முனிவர் தம்மை வினவிய முனிகணங்களுக்கு உபதேசித்தார் எஃபது ஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்.

இந்த 'தசச்லோகி' என்னும் ஸ்தோத்திரத்திற்கு அனுபந்தமாக அதே உபநிஷத்திலே ஆறு சுலோகங்கள் காணப்படுகின்றன. அவை வருமாறு,

---

चतुर्मुखमुखाम्भोजवनहंसवधूर्मम ।
मानसे रमतां नित्यं सर्वशुक्ला सरस्वती ॥ १ ॥

*சதுர்முக–முகாம்போஜ–*
*வனஹம்ஸவதூர்மம*
*மானஸே ரமதாம் நித்யம்*
*ஸர்வசுக்லா ஸரஸ்வதீ*

இந்த சுலோகம் ஆசார்ய தண்டி என்னும் மஹாகவி இயற்றிய காவ்யாதர்சம் என்னும் நூலின் தொடக்கத்திலே ஸரஸ்வதிப் பிரார்த்தனையாக அமைந்துள்ளது.

*சதுர்முக – முகாம்போஜவன - ஹம்ஸவதூ:* = நான்முகனுடைய வாய்களாகிய தாமரைக் காட்டிலே வாழும் அன்னப்பேடாகியவளும் *ஸர்வ ஸுக்லா* = (யாதொரு மறுவுமில்லாது தூயவளாய்) முற்றும் வெண்ணிறமுடையவளான *ஸரஸ்வதீ* = ஸரஸ்வதீதேவி *மம* = என்னுடைய *மானஸே* = மனதிலே *நித்யம்* = எப்பொழுதும் *ரமதாம்* = களிப்பாளாக.

முற்றும் வெண்ணிறமான அன்னப்பேடு தன் காதலனாகிய அன்னத்தோடு 'மானஸ ஸரஸ்' என்று பிரஸித்திபெற்ற இமயமலைப் பொய்கையிலே பூத்த தாமரை மலர்களிலே இன்ப வாழ்வு வாழும் என்பர்; அதுபோல என்னுடைய மனமாகிய தடாகத்திலே மலர்ந்த ஹ்ருதயமாகிய தாமரைப்பூவிலே பரப் பிரும்மத்தோடு ஒன்றியவளாயும் தூய வெண்ணிறங் கொண்ட திருமேனியுடையவளாயும் விளங்கும் ஸரஸ்வதீ தேவி என்றும் இன்புற்று வீற்றிருப்பாளாக.

---

नमस्ते शारदे देवि काश्मीरपुरवासिनि ।
त्वामहं प्रार्थये नित्यं विद्यादानं च देहि मे ॥ २ ॥

நமஸ்தே ஶாரதே தேவி
காஶ்மீரபுரவாஸினி
த்வாமஹம் ப்ரார்(த்)தயே நித்யம்
வித்யாதானம் ச தேஹி மே

காஸ்மீரபுரவாஸினி = காச்மீர புரத்திலே ('சாரதா மடம்' என்னும் இடத்திலே) வாழ்கின்ற தேவி ஶாரதே = சாரதாப் பிராட்டியே! தே = உனக்கு நம: நமஸ்காரம்; த்வாம் = உன்னை அஹம் = நான் நித்யம் = எப்பொழுதும் ப்ரார்(த்)தயே = வேண்டுகிறேன், மே ச: = எனக்கும் வித்யா தானம் = கல்வியென்னும் நன்கொடையை தேஹி = அளிப்பாயாக.

---

अक्षसूत्राङ्कुशधरा पाशपुस्तकधारिणी ।
मुक्ताहारसमायुक्ता वाचि तिष्ठतु मे सदा ॥ ३ ॥

அக்ஷஸூத்ராங்குசதரா
பாஶபுஸ்தகதாரிணீ
முக்தா ஹார-ஸமாயுக்தா
வாசி திஷ்டது மே ஸதா

அக்ஷஸூத்ராங்குஶதரா = (ருத்ராக்ஷ மாலை) ஜபமணிக் கோவையையும் துரட்டியையும் (இரண்டு கைகளிலே) கொண்டவளும் பாஶபுஸ்தகதாரிணீ = பாசக்கயிற்றையும் ஏடுகளையும் (வேறு இரண்டு கைகளிலே) கொண்டவளும் முக்தாஹாரஸமாயுக்தா = முத்து மாலையோடு பொருந்த விளங்குபவளுமான ஸரஸ்வதீ தேவி மே = என்னுடைய வாசி = வாக்கிலே ஸதா = எப்பொழுதும் திஷ்டது = நிலைப்பெற்றிருப்பாளாக.

कम्बुकण्ठी सुताम्रोष्ठी सर्वाभरणभूषिता ।
महासरस्वती देवी जिह्वाग्रे संनिवेश्यताम् ॥ ४ ॥

கம்புகண்டீ ஸுதாம்ரோஷ்டீ
ஸர்வாபரணபூஷிதா
மஹாஸரஸ்வதீ தேவீ
ஜிஹ்வாக்ரே ஸம்நிவேச்யதாம்

கம்புகண்டீ = சங்கைப்போன்ற கழுத்தையுடையவளும் ஸுதாம்ரோஷ்டீ = மிகச்சிவந்த உதடுகளையுடையவளும் ஸர்வாபரணபூஷிதா = எல்லா அணிகளையும் அணிந்தவளுமான மஹாஸரஸ்வதீ தேவீ = மஹாஸரஸ்வதீ தேவியானவள் ஜிஹ்வாக்ரே = (என்னுடைய) நாக்கின் முற்பாகத்திலே ஸந்நிவேஸ்யதாம் = நன்றாக அமர்ந்திருப்பாளாக.

---

या श्रद्धा धारणा मेधा वाग्देवी विधिवल्लभा
भक्तजिह्वाग्रसदना शमादिगुणदायिनी ॥ ५ ॥

யா ஸ்ரத்தா தாரணா மேதா
வாக்தேவீ விதிவல்லபா
பக்த-ஜிஹ்வாக்ர-ஸதனா
ஸமாதிகுணதாயினீ

ஸ்ரத்தா = (அவர்களுடைய) சிரத்தையாகவும் (ஆஸ்திக புத்தியாகவும்) தாரணா = மனதை (ஒரு நிலையாக) சலியாதபடி நிலைத்துநிறுத்தும் சக்தியாகவும் மேதா = மறவாமல் எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும் ஞாபக சக்தியாகவும் வாக்தேவீ = வாக்காக விளங்கும் தேவியாகவும் விதிவல்லபா = பிரும்மாவின் நாயகியாகவும் யா = எவள் (விளங்குகிறாளோ) ஸா = அவள் பக்த-ஜிஹ்வாக்ர-ஸதனா = தன்னை வழிபடும் பக்தர்களின் நாக்குகளையே ஆலயங்களாகக் கொண்டவளாய் ஸமாதி குணதாயினீ = (அந்த பக்தர்களுக்கு) சமம் (தமம்) முதலிய குணங்களை அளிக்கிறாள்.

नमामि यामिनीनाथलेखालंकृतकुंतलाम् ।
भवानीं भवसंतापनिर्वापणसुधानदीम् ॥ ६ ॥

நமாமி யாமினீநாத-
லேகாலங்க்ருத-குந்தலாம்
பவானீம் பவஸந்தாப-
நிர்வாபண-ஸுதா-நதீம்

பவ-ஸந்தாபநிர்வாபண-ஸுதாநதீம் = ஸம்ஸாரமாகிய வெக்கையைப்போக்குகிற அமிர்த வெள்ளமாய் பெருகும் நதியாகியவளும் யாமினீநாதலேகாலங்க்ருத குந்தலாம் = (இரவின் காதலனை) சந்திரனுடைய பிறையைத் (தன்) கூந்தலுக்கு அணியாகக்கொண்டவளுமான பவானீம்=பவானி என்னும் உமாதேவியின் ஸ்வரூபமாக விளங்கும் ஸரஸ்வதீ தேவியை நமாமி=வணங்குகிறேன்.

இவ்வாறு பிரார்த்தித்து அடி வணங்கிய ஆச்வலாயன முனிவருக்கு ஸரஸ்வதீதேவி பிரத்யக்ஷமாகி அவருக்குப் பிரும்மவித்தையை உபதேசித்த பிரகாரத்தை இந்த உபநிஷத் பிரதிபாதிக்கின்றது. இந்த வித்தையை குருமுகமாகவே பெறவேண்டுமாதலால், ஸ்தோத்ரபாகமான 'தசஸ்லோகீ'யும் அதற்கு அங்கங்களான தியான சுலோகமும் பிரார்த்தனைச் சுலோகங்களுமே இங்கு தொகுத்து விளக்கப்பெற்றுள்ளன.

